உ

சிவமயம். 1942

திருச்சிற்றம்பலம்.

# நாணிக்கண்புதைத்தல் என்னும்

# ஒருதுறைக்கோவை.

இஃது

கோயமுத்தூர் ஜில்லா சித்தூர் ம-ா-ா-ஸ்ரீ

வெ. இ. கலியாணசுந்தர முதலியார்

அவர்கள் பேரில்

முடியூர் ஷெட்டர் சகோதரர் ம-ா-ா-ஸ்ரீ

நல்லவீரப்ப முதலியார் அவ

விருப்பத்தின்படி

திருநெல்வேலி ஜில்லா சேற்றூர் சமஸ்தான வி

ம-ா-ா-ஸ்ரீ

மு. மீ. மா. அ. கணபதிக்கவிராயர்

இய

சீகெ. ஆர் வெர்ட்

கணபதி துணை.

# சாற்றுக்கவிகள்



---

*சேற்றூர் சமஸ்தானம் மகா வித்துவான் முகவூர் ம-ா-ா-ஸ்ரீ*

**இராமசாமிக் கவிராயர் அவர்கள்**

*இயற்றியது.*

---

ஏவையொன்றுங்கண்மடவார்க்கதிமதனன்மதிவதனன்
இரவலோர்க்குக்
ாவையொன்றுங்கரதலத்தான்கலியாணசுந்தர
சிங்காரன்மேல்வெண்
பூவையொன்றும்வாணியுறைகணபதிமாலோர்
துறையிற்புகழ் சொல்லுங்
கோவையொன்றேகோல்வமற்றைக்கோவையிதற்
கிணையோமெய்கூறுங்காலே.

இன்ஸ்பெக்டிங் இஸ்கூல் மேஸ்டர் பென்ஷனர்

வீராட்சிமங்கலம்

தமிழ்ப்புலவர் ம-ள-ள-ஸ்ரீ

**தீ. சிவன்பிள்ளை அவர்கள்**

இயற்றியது.

---

முத்தமிழ்ச்சங்கப்புலவோர்முத்தரையர்கோவையினை
வித்தகம்பாராட்டிவியப்புற்றார்—அத்தகைமையோர்
மெச்சுங்கணபதிசெய்வீறுதுறைக்கோவையைப்போல்
இச்சகத்திலுண்டோவினி

சொல்வாணர்சிங்கமெனத்தோன்றுகணபதிதான்
கல்யாணசுந்தரன்மேற்கட்டுரைத்த—நல்யாணர்க்
கோவைச்சுவையமிர்தங்கொண்டார்புலவரினித்
தேவர்க்குமுண்டோசிறப்பு.

## சாற்றுக்கவிகள்.

சேற்றூர் சமஸ்த்தான வித்துவான் ம-௱-௱-ஶ்ரீ
**இராமகிருஷ்ண ஆசாரியார் அவர்கள்**
இயற்றியது.

---

கோவையுமேய்த்துவந்தருள்கோபாலனெனுங்
 கொண்டலையுட்கொண்டுபோற்றிக்
கோவையெலாமராசுபுரிகலியாணசுந்தர
 குபேரனென்னுங்
கோவையெவரும்புகழக்கணபதிநாவலவனெனுங்
 குணவான்சொன்ன
கோவைநவமணிக்கோவைமறுகோவை
 கருதுமணிக்கோவைதானே.

---

கோயமுத்தூர் லண்டன் மிஷன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
ம-௱-௱-ஶ்ரீ
**ச. திருச்சிற்றம்பலம்பிள்ளை அவர்கள்**
இயற்றியது.

---

கன்னனிகர்சித்தூர்க்கலியாணசுந்தரன்மேல்
மன்னுபுகழ்க்கோவைமகிழ்ந்துரைத்தான்
 தென்னவனுந்
துங்கமுயர்தென்சேறைச்சுந்தரராசேந்த்ரன்மெச்சும்
நங்கள்கணபதிவாணன்.

சிவகிரி சமஸ்த்தான வித்துவான் எட்டிசேரி ம-ா-ா-ஸ்ரீ
**திருமலைவேலுக்கவிராயர் அவர்கள்**
இயற்றியது.

---

கற்பதித்தானத்திசையென்றுவந்ததொண்டைநாட்டரசன்
கனஞ்சேர்சித்தூர்ப்
பொற்பதித்தானத்தில்வளர்கலியாணசுந்தரன்மேற்
புகழ்கூர்வாணர்
நற்பதித்தானத்திறன்மாவரசர்மெச்சுங்கோவைசொலி
நன்காராய்ந்தச்
சிற்பதித்தானத்தியல்தேர்கணபதிப்பேர்க்கவிராச
சிங்கந்தானே.

---

பழனி ம-ா-ா-ஸ்ரீ மு. மாம்பழக்கவிச்சிங்கநாவலரவர்கள்
மாணாக்கருள் ஒருவராகிய ஆயபுரி ம-ா-ா-ஸ்ரீ
**இராமலிங்கக்கவிராயர் அவர்கள்**
இயற்றியது.

---

சீருலவுந்தென்சேறைக்கணபதிநாவலன்றமிழாற்செல்வமோங்
ஏருலவுங்கல்யாணசுந்தரமாறன்மீதிலியம்புந்திவ்ய [கும்
பேருலவுங்கோவையமுதஞ்செவிக்கேற்பக்கிடைத்தாற்பிரியமா
வாருலவுமுததியைமுன்கரஞ்சேப்பவிபுதர்களுமதித்திடாரே.[க

சாற்றுக்கவிகள் முற்றிற்று.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

---

சேற்றூர் சமஸ்தான் வித்த்வான் உடுமலைப்பேட்டை போர்டு
ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ம-ள-ள-ஸ்ரீ
**கந்தசாமிக்கவிராயர் அவர்கள்**
இயற்றிய

## நேரிசையாசிரியப்பா.

---

சீர்வளர்கமலச்செல்விகளிருவர்
பேர்வளர்ந்தோங்கப்பெற்றுவீற்றுள்ள
சேரநன்னாட்டைச்சேர்கொங்குநாட்டிற்
காரமர்காக்கள்காக்களைத்தாக்க
ஓங்கியேபுல்வரொளிர்முகம்நோக்கித்
தீங்கனிநல்கித்திகழுங்கரைகளில்
நத்தூர்தடங்களூற்றிசையுஞ்சூழ்
சித்தூரென்னச்செப்புமாநகரிற்
பத்தியார்க்கருளும்பரமன்மால்விரும்
பத்தியானஞ்செய்பண்புமன்பும்
தருவலர்புகழத்தரணியினெவர்க்குந்
தருவலர்கொள்ளத்தந்திடுமீகையும்

மருவலர் குவளைவளைதருபுயமும்
மருவலர்மணிமுடிவந்துறைபதமும்
நிறைத்தராசரீகவாழ்வும்
நிறைத்தராசினோர்தருமனமும்
நீங்கா திருக்கநெடுநாள் முன்செய்
ஓங்குபுண்ணியத்தாலுற்றமேலோன்
தொண்டைமண்டலவேளாளர்மரபு
பண்டைசெய்நற்றவப்பண்பாஞ்சொரூபன்
முன்வெங்கடாசலமுன்வந்தருள்புரி
மன்வெங்கடாசலமாலருள்மைந்தன்
கல்வித்திரத்தினன்கற்றவர்நேசன்
சொல்விற்பனனற்சுகுணதயாளு
மெய்ப்புகழ்வளர்க்கும்விரதசன்மார்க்கன்
சுப்பராயசுந்தரன்முன்னோன்
சொராசர்வாழ்த்துஞ்செயம்படைத்தோங்கும்
சுசராமசாமித்துரைதவத்துதித்தோன்
சோமசுந்தரர்துணையடிபரவும்
சோமசுந்தரச்சுமுகன்றுணைவன்
செல்வமுமெழிலுஞ்சேர்ந்தழாண்பாற்
சொல்கல்யாணசுந்தரனென்னும்
பேருடையான்பலபேறுடையானற்
சீருடையான்இச்சீமான்மீது
புகழ்த்தமிழ்ப்பாண்டிப்பொன்னுடைதனில்
திகழ்பலவளஞ்சேர்சேறையூர்வாசன்
எந்தைபாலென்னுடனேசிலகாலம்
முந்துநற்பலகலைமொய்ம்புறத்தேர்ந்தோன்
கற்கண்டென்னக்கனிரசம்பெருகும்

சொற்கொண்டேபாத்தொடுக்கும்வல்லோன்
சொன்னலமிகுத்ததூயன்கணபதி
என்னும்நாமன்எனதுநேயன்
முன்னோர்நூலின்முறையெலாந்தழுவி
இன்சொற்றமிழ்வளரெல்லையிலேவரும்
மகிழ்ந்துகேள்விசெய்துவந்துநாளும்
திகழ்ந்தகல்வித்திறத்தைமெச்சிடஅச்
சித்தூர்வள்ளலைச்சேர்புகழ்விளங்க
முத்தூர்கோவைமுதலாங்கோவை
எவையும்விலைதரலேற்குமென்றே
சவையோர்பலருஞ்சாற்றுநிற்க
எண்பெறுங்கோவைகளெவையும்நாணிக்
கண்புதைத்தொதுங்குங்கவினலஞ்செறியக்
கன்னியர்நாணிக்கண்புதைத்தலை
மன்னுந்துறையில்வழுத்தினன்கோவையே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

உ

சிவமயம்.

# நாணிக்கண்புதைத்தல் என்னும் ஒருதுறைக்கோவை.

---

## கலித்துறை.

### விநாயகர் வணக்கம்.

தங்கத்திருமுகில்கல்யாணசுந்தரதாமணிசை
தங்கத்திருவளர்க்குங்கோவைசாற்றத்தடந்தொறும்நந்
தங்கத்திரும்புனல்சூழுஞ்சித்தூர்ப்பதிதுங்குகைம்மா
தங்கத்திருசரணம்புயந்தன்னைத்தலைக்கொள்வனே

### நூல்.

சீர்கொண்டதிங்களணிசோமசுந்தரதேவைத்தொழுங்
கார்கொண்டவண்கரன்கல்யாணசுந்தரகன்னன்வெற்பில்
ஏர்கொண்டகோட்டையுஞ்சக்கரம்போற்கையிலேந்துவிரேல்
வார்கொண்டபூங்குழலீருமைமாலென்றுவாழ்த்துவனே (க)

பூமேவுசோலைவளஞ்சூழ்சித்தூர்வளர்பூமனருட்
காமேவுமிந்திரன்கல்யாணசுந்தரகாமன்வெற்பீர்
மாமேவுசெம்பொன்வடமலைக்கொண்டம்மான்மருவத்
தாமேவுசீர்பெறிற்பூமாதென்றேயுமைச்சாற்றுவனே (௨)

தந்தமதகளிற்றைப்பொருதாளிருதாளிணையை
விந்தைபெறப்பணிகல்யாணசுந்தரவேந்தன்வெற்பிற்
கந்துகந்தந்துகடிவாளங்கைக்கொண்டகாரணத்தைச்
சுந்தரமானமதிநுதலேயினிச்சொல்லுவையே (௩)

வார்முகமீறியகொங்கையர்மோகன்வயும்படைக்கும்
போர்முகவீமன்கலியாணசுந்தரபூமன்வெற்பீர்
கார்முகராமனெதிருற்றபின்னுங்கரணிடத்தே
கூர்முகவாளிமறைவாயிருந்ததொர்கொள்கையென்னே (௪)

பலப்பலதேவர்பரவுந்துளபப்பசும்புயன்மால்
மலர்ப்பதமும்பணிகல்யாணசுந்தரன்மால்வரைமேற்
கலைப்பணிமாமதிக்கொம்பரன்னீருங்கள்கைவசத்தே
சிலப்பதிகாரந்தெரிந்துஞ்சிந்தாமணிதேர்ந்திலனே (௫)

தாரினுஞ்செங்கைத்தலத்தினுஞ்செஞ்சொற்றனிலுமொன்னார்
போரினும்வாகைகொள்கல்யாணசுந்தரபூமன்வெற்பிற்
கூரினுங்கூரியகாவியம்பார்க்கிலக்கொற்றவரை
நேரினும்போற்றிப்புகழாதவரெவர்நேரிழையே (௬)

இணக்கந்தெரிந்தேயிணங்குமனோகரனெங்குமிசை
மணக்குங்குணாகரன்கல்யாணசுந்தரமாரன்வெற்பிற்

புணர்க்குமின்னாரியர்நம்புவிநாயகர்புந்திமெய்க்க
வணக்கந்தந்தாலவராற்சொர்க்கபோகத்தைமன்னுவரே (எ)

ஓதுந்தமிழ்க்கவிவாணரைக்காக்கவுவந்தருளெப்
பே[illegible]ம்புரிந்தருள்கல்யாணசுந்தரபூமன்வெற்பிற்
சூ[illegible]கொண்டார்வடிவுங்கொளுவாரென்றசொல்லிருக்கத்
தாதும்பொலிகுழலாயந்தஞாயந்தவிர்த்ததென்னே (அ)

செருக்குஞ்செறுநரைவென்கண்டுவாணர்க்குச்செல்வநிதிப்
பெருக்கம்புரிகின்றகல்யாணசுந்தரப்பேர்புனைந்த
திருக்கருணாகரன்வெற்பனையாய்தமிழ்ச்சேரவருங்
குருக்கண்னைவின்றிக்கோமானைநின்கைகுவித்ததென்னே (கூ)

மாலோட்டுந்தேரிடைவில்வாங்கும்பார்த்தன்மருவலர்மேல்
வேலோட்டுஞ்செங்கரன்கல்யாணசுந்தரவேந்தன்வெற்பில்
நூலோட்டுநுண்ணிடையீரனுபோகத்தினுட்பமிதோ
காலோட்டமின்றியம்மேருஸவத்தள்ளலெக்காரணமே (ய)

கல்லாற்கவிகைசெய்தான்புரந்தானைக்கணிந்தருள்செஞ்
சொல்லாற்றுதித்திடுங்கல்யாணசுந்தரதுங்கன்வெற்பின்
நல்லார்க்குணல்லர்வநீரேமதன்சமரத்துக்கொத்த.
வல்லாரெனப்புகழ்வோங்கைசக்கணையும்வழங்கிடினே (யக)

கைவரையீருரிபோர்த்தும்பிரான்பொற்கழல்பரவுஞ்
சைவரைவாழ்விக்குங்கல்யாணசுந்தரசாமியுயர்
மைவரைமீதுமலர்மேலுலாவுமடந்தையன்னீர்
ஐவரைநான்கண்டுங்கண்ணன்கருணையடைந்திலனே (யஉ)

தடத்தூர்வளைவயலூர்தொண்டைநாடன்றகுமுகுந்தன்
திடத்தூர்பொற்றேரினன்கல்யாணசுந்தரதீரன்வரை
யிடத்தூர்முகிலைப்பொருங்குழலாயெழிலேந்திநின்ற
கடத்தூர்கண்டேனங்குதான்றோணிகாணவுங்காட்டுவையே ( )

பாகைநிகர்மொழிப்பாவையர்க்கிங்கிதன்பற்றலர்பால்
வாகையணிபுயன்கல்யாணசுந்தரவள்ளல்வெற்பிற்
றோகைமயிலனையீர்தனந்தந்திடுந்தோற்றத்தினால்
ஏகையுடையவரென்றுமையாவருமேத்துவரே (௰௪)

கொங்கார்கமலவயற்றொண்டைநாட்டுக்குபேரனென
மங்காதவாழ்வுயர்கல்யாணசுந்தரமன்னன்வெற்பிற்
சிங்காரவானைமலைகாட்டல்போலத்திருநிகர்த்த
நங்காயம்பான்திணேர்மையுங்காட்டனலனுனக்கே (௰௫)

சூலூர்வளைவயற்சித்தூரெவ்வூர்க்குந்தலங்குபுகழ்
மேலூரெனக்கொண்டகல்யாணசுந்தரவேந்தன்வெற்பின்
மாலூர்மலர்த்திருவேதலம்பார்க்கவருமெனக்கு
வேலூர்கண்காட்டிற்றிருவலம்பார்க்கவிரும்புவனே (௰௬)

ஞாலம்புகழ்செயமால்ராமசாமிநராதிபதி
பாலன்குபேர்ன்கலியாணசுந்தரபார்த்தன்வெற்பின்
மேலன்புகூரப்புனைசோமணிங்குவிரும்புவர்க்குச்
சேலங்கடைக்கண்டையாபாரமுங்கொளச்செய்தனன்றே (௰௭)

செருமுனைதோறும்பொருநரைவென்றுதிறம்படைத்து
வருமுனைவேற்கரன்கல்யாணசுந்தரவள்ளல்வெற்பிற்

றருமனைக்கண்டபின்னல்வரைநேசித்துச்சார்ந்துகொண்டாற்
பெருமுனையுற்றமராடுவன்கூடிநற்பெண்ணரசே (௰அ)

அபகாரியர்க்குப்பெருந்தண்டநாட்டியருள்படைக்குஞ்
சுட[redacted]யக்கொடைக்கல்யாணசுந்தரதுங்கன்வெற்பில்
உப[redacted]யாவதுநன்றெனவேயுளத்தோர்ந்துகொண்ட
விபகாரியானதிற்கஞ்சத்தனத்தைவிடுத்தனையே (௰கூ)

விடத்தைப்பொருங்கண்மடவார்மடல்வரைவே ள்விந்தைக்குந்
திடத்தைத்தரும்புயன்கல்யாணசுந்தரதீரன்வரை
யிடத்தையுற்றேவளர்பூங்கொம்பசைந்திடவேற்றிவைத்த
குடத்தைத்திறந்தந்ததேனைவிடாததென்கூறுதியே (உ௰)

கற்றோர்தினம்புகழ்கல்யாணசுந்தரகன்னனென்ன
வுற்றோன்சித்தூர்க்கிசைவுற்றோன்சிலம்பினுயர்மடவீர்
சிற்றூரிருப்பொடும்பட்டினச்சார்புந்தெரிந்துகொளப்
பெற்றேனெனிற்களிப்பாயரசாட்சியும்பேணுவனே (உக)

நாவியல்செந்தமிழ்ப்பாணர்க்கேயுடனண்ணுபொருள்
ஆவியுமன்னவன்கல்யாணசுந்தரவண்ணல்~~வெற்பில்~~
யோவியமேயஞ்சுவர்க்கவிலைக்கணமோர்ந்திடுதல்
காவியம்பார்த்தபின்கற்பவர்செய்தருங்காரியமே (உஉ)

சிலைமீன்முக்கோடிநிசாசரர்போர்வென்றசீர்விசையன்
வலவன்பதம்பணிகல்யாணசுந்தரமாறன்வெற்பிற்
கலைவையணியும்பொருட்டற்குறிப்பொடுகாட்டவல்லாய்
நலமாமயக்கவணியுஞ்சற்றாய்ந்திடநல்கருளே (உங)

உருக்கமிலாதமனத்திலங்காபுரியொன்னலரைத்
தருக்கற்வென்றருள்கல்யாணசுந்தரசாமிவெற்பின்
மருக்கமழ்பூங்குழலீருமையார்ந்துவசிக்குமுயர்
திருக்கம்பைநாடிவர்வள்ளூத்திலுஞ்சென்றுசேருவரோ (உச)

நேயத்தமிழ்ப்புசழ்க்கல்யாணசுந்தரநேமனுயர்
வேயொத்தமென்புயமின்னார்கட்கங்கசன்வெற்பின்முன்னங்
காயத்திரன்றென்றுங்கல்லத்திதீதென்றுங்கண்டுணர்ந்த
ஞாயத்தினாலந்தக்கல்லத்தியீந்ததுஞாயமன்றே (உரு)

சிற்றுமதிநுதற்றேன்மொழியீர்நற்றினந்தினமுங்
கற்றுமகிழ்தருங்கல்யாணசுந்தரகன்னனுயர்
வெற்றிமணிக்கிரிமேலானைக்கன்றைவெளியில்விட்டு
முற்றுமமுதங்கரத்தனல்லார்க்குமுறைமையன்றே (உசு)

வெற்புயர்திண்புயன்கல்யாணசுந்தரவேந்தன்வெற்பிற்
கற்பகங்கொண்டுவளையுங்கமலமுங்காட்டுகின்ற
பொற்புயர்கைமிசைத்தேனுமருவப்பொருந்தியநீ
அற்புதமானமணிவளந்தனையகற்றலென்னே (உஎ)

நஞ்சத்தைக்கண்டத்தணிந்தோனிருபதநாண்மலரை
நெஞ்சத்திருத்தியகல்யாணசுந்தரநீதன்வெற்பில்
வஞ்சத்திருட்டிதனைக்காட்டிப்பின்னிடுவல்விலங்கைக்
கஞ்சத்தில்வாழ்குயிலேயஞ்சுவான்மதக்கள்ளனுமே (உஅ)

இலங்காபுரியொன்னலாரைவென்றோன்பதமேபரவும்
நலங்காதலித்தருள்கல்யாணசுந்தரநண்பன்வெற்பிற்

சலங்காவிதமக்கருடனிடம்பெறுங்காட்சியின்றி
வலங்காணுமானையிடங்கண்டென்சேமவழிதனக்கே (௨௯)

நூபுரச்சீறடிநுண்ணிடைமாதர்மெய்நோக்குமுல்லை
ம[redacted]ம்வளனுங்கல்யாணசுந்தரவள்ளல்வெற்பிற்
கே[redacted]தூவியைச்சாட்டிநின்றுயருள்கூர்வதற்குத்
தாபரமானபெருமானைக்காட்டத்தலையபுரியே (௩௰)

சேலேநிகர்த்தவிழிமடமாதர்தினமடலின்
பாலேவரைதருகல்யாணசுந்தரபார்த்தண்வெற்பீர்
வேலோன்வளரும்பதியுணர்ந்தோமுண்மைமேவுமணி
மாலோன்றுயிலும்பதியுங்கண்டாலுண்டுவண்மையதே (௩௧)

நெடுவரைபூடுருவப்பொருவேற்கைநிபுணனையன்
பொடுநிதம்பணிகல்யாணசுந்தரனெண்கிரிமேல்
நடுவனிருக்கவுமென்பால்வழுவையும்நாடுதற்குக்
கொடுவந்துகாட்டும்விபசாரமேபெறுங்குற்றத்தையே (௩௨)

முன்றலொருசைமுகத்தன்பதாம்புயமுன்னிவளர்
நன்றாகரீகன்கலியாணசுந்தரநண்பன்வெற்பிற்
பன்றுலகும்புகழ்கருமானைக்கைப்பான்மறைத்துக்
கன்றனையமெனக்காட்டலுற்றாயென்னகாரணமே (௩௩)

வாசிக்கொருநகுலன்விக்ரமார்க்கன்மனுதருமன்
நேசிக்குமிங்கிதன்றென்னவராயனிமலர்பதம்
பூசிக்குஞ்சிந்தையன்கல்யாணசுந்தரபூமன்வெற்பிற்
காசிக்கலம்பகர்தந்தாலுயர்வெனக்கைக்கொள்வனே (௩௪)

கங்காநதிமதிவேணிப்பிரானைக்கௌரியொரு
பங்காளனைப்பணிகல்யாணசுந்தரபார்த்தன்வெற்பிற்
சிங்காரமாகியகோவைக்கண்காண்பவர்செங்கைமிசை
நங்காயெலுமிச்சம்பூங்கனியுங்கொண்டுநண்ணுவரே (௯௫)

சுருக்காதசெந்தமிழ்ப்பாவாணர்க்கின்பந்தலங்குகெ[redacted]
பெருக்கால்விளைத்தருள்கல்யாணசுந்தரப்பேர்விசைய[redacted]
கிரிக்கேமலர்ந்தமலர்க்குழலாயுயர்சேண்மைகொண்ட
திருக்கோவையுந்தந்துகல்லாடநீயருள்செய்தனன்றே (௯௬)

தெள்ளுதமிழ்க்கடலெல்லைப்பெருங்கரைசேர்ந்தவரும்
விள்ளற்கரும்புகழ்க்கல்யாணசுந்தரவேந்தன்வெற்பில்
வள்ளமுன்னூழியொருபடியாகவழங்குவதே
யுள்ளபடியதைமாறுமனீமனதுட்கொள்வையே (௯௭)

பிடிநேரிடைநடைமின்னார்க்குமோகன்பெருங்கருணைக்
கொடியேயுயர்த்தியகல்யாணசுநதரகொண்டல்வெற்பிற்
படிமேலுயர்தெய்வயானையைக்கண்டுபணிந்ததுபோல்
வடிவேலனையவன்கண்ணருள்வேண்டிவணங்குவனே (௯௮)

திக்கெவையுந்தினமெய்க்குங்குணங்கொடைசெல்வமெலாம்
மிக்குமுயர்புகழ்க்கல்யாணசுந்தரவேள்கிரியாய்
அக்குரனைத்தெரிசிக்கவுன்பக்கமணுகல்கண்டுந்
தக்கமலையனதுசேவைகாணெனச்சாற்றலென்னே (௯௯)

ஆவைப்புரப்பதற்காகச்சிலம்பினையங்கைகொண்ட
தேவைப்பணிந்தருள்கல்யாணசுந்தரதீரன்வெற்பிற்

பூவைக்கிசைந்தமொழியீரியலிற்பொருந்துமவர்
கோவைத்துறையிற்கலித்துறையுங்கண்டுகொள்ளுவரே (௪௰)

புலி[redacted]வாயுமொருதுறைநீருணப்போற்றுமுண்மை
வ[redacted]சுசெய்கல்யாணசுந்தரமன்னன்வெற்பார்
ச[redacted]சகிப்பெருந்தனந்தந்திடுங்காரணத்தால்
மல்யு[redacted]ாக்குழலீர்வள்ளலென்றும்மைவாழ்த்துவனே (௪௧)

மின்னென்றுவேற்கரன்கல்யாணசுந்தரவேந்தனுயர்
பொன்னென்றுமால்வரைமேற்சுபராசிக்குட்பொன்னனையாய்
பண்ணென்றும்பன்னிரண்டுங்காணவந்தனன்பன்னென்றுபோ
பின்னென்றுங்காட்டிலைகாட்டாதவாறென்கொல்பேசுதியே [ற்

காவுங்கருங்கொண்டலும்பொருவுங்கொடைக்கன்னனருட்
பூவிந்தைவாழ்புயன்கல்யாணசுந்தரபூமன்வெற்பின்
மேவுங்கைவேணுவிற்கோவுங்குவித்தவிதமதுபோல்
மாவிந்தமுங்கொளிற்கோவிந்தனென்றுமைவாழ்த்துவனே(௪௩

குறுமான்முயற்பிறைவேணியர்க்கங்கைகுவித்துநிதம்
நறுமாலைசூட்டியகல்யாணசுந்தரநண்பன்வெற்பில்
உறுமாரன்போர்வென்றரசாளச்சிங்கமுவந்துகொளப்
பெறுமாதனந்தந்ததுபோற்செங்கோலும்பெறவருளே (௪௪)

உளங்கனிவாகியகல்யாணசுந்தரனெண்கிரிமேல்
வளங்கனிவஞ்சிக்குறிச்சீர்தனக்குமருவியகூ
விளங்கனிபோலச்சுருவிளந்தண்மலர்மேவுமென
இளங்கனியேதெரிந்துங்காட்டிலாய்ச்சற்றியம்புவையே (௪௫)

சொற்கொண்டவாணர்துயரந்தவிர்க்குஞ்சுகுணனென்றோர்
மற்கண்டதிண்புயன்கல்யாணசுந்தரமன்னன்வெற்பில்
விற்கொண்டவாணுதலீர்நன்கினிப்பைவிளைவிக்கின்ற
கற்கண்டுகொண்டனன்றேனையும்விட்டுக்கலந்தனன் [illegible] (௬௬)

தேனார்மலர்ப்புயன்கல்யாணசுந்தரதீரன்வெற்பின்
மீனேறுங்கையெடுத்தேசொக்கலிங்கத்தைத்தேவண்டுமலர்
மானேமற்றுங்கைகயோராதிருந்தனைவந்தனிடம்
நானேதிருவிளையாடலைக்கேட்பதுநன்றலவே (௬௭)

நற்கொண்டலைக்கொண்டலைக்கொண்டலுக்கிணைநாட்டுகொடை
பொற்கொண்டசெங்கரன்கல்யாணசுந்தரபூமன்வெற்பிற் [ப்
கற்கொண்டவர்மனங்கல்லென்றிருக்கினுங்காட்டல்செய்வீர்
விற்கொண்டவாணுதலீர்மணிநோக்கம்விளங்கிடவே (௬௮)

மணங்கமழ்மார்பன்கலியாணசுந்தரமால்வரைமேல்
இணங்குங்கமலமலர்க்கன்னியேயுன்னிதையம்வைக்க
குணங்கண்டுரைக்குஞ்சருவிசண்ணைநக்கநிப்பினொடு
சுணங்கும்படர்ந்தமுலைகாட்டினன்மெய்ச்சுகம்பண்டுமே (௬௯)

பாகத்தையீசனிடம்பெற்றதேவிபசம்பணிநல்
யோகத்தைப்பெற்றவன்கல்யாணசுந்தரனெண்கிரிமேல்
மேகத்தையொத்தகுழலீரென்பார்வைக்குமதனியில்
நாகத்தைக்காலுடன்காட்டிவிட்டானன்னயமுமக்கே (௫௰)

வேதாவையுந்தியினுவளித்தோனருள்வேண்டியவன்
பாதாம்புயம்பணிகல்யாண்சுந்தரபார்த்தன்வெற்பில்

ஆதாரமின்றிக்கொடுத்தென்னை நீயுன்னணிதனத்தைத்
தாதாரையாளும்பெறுவேனதற்குச்சமையமிதே (௫௧)

பட்[redacted]வத்தேதமிழ்வாணர்க்குமெச்சும்பரிசுநல்கும்
ல[redacted]ர்ளல்கலியாணசுந்தரநண்பன்வெற்பின்
[redacted]ராயகலைக்கோவைக்கண்டவர்மேதினிமேல்
அ[redacted]சுந்தரக்கோவையுங்காண்பரருள்பெறவே (௫௨)

பய்கொண்டநாகப்பணியணிவேணிப்பரன்பதத்தைக்
சய்கொண்டுபூசிக்குங்கல்யாணசுந்தரசாமன்வெற்பின்
மெய்கொண்டபாவைவரையெனக்காகிதமேயருளி
மய்கொண்டெழுதப்பெறுங்கோற்றராதவகைசொல்லையே

பத்தியொழுக்கங்குணங்கொடைகல்விப்பயனுணர்வு
சித்திநிறைந்தருள்கல்யாணசுந்தரதென்னன்வெற்பின்
மெய்த்திருவேசொல்விகாரவிசையம்விளங்குநிலை
யத்தினகரமகரமுன்னேவரற்காதரமே (௫௪)

தேசுற்றசெந்தமிழ்க்கல்யாணசுந்தரதீரன்வரை
வாசக்கருங்குயிலேயன்றுறப்புடன்மன்னுபல
ஆசுகந்தன்கையிருக்கப்பந்தென்கையடைந்ததிலென்
பேசும்பொழுதுடனுடனுக்கேற்றபெலனல்லவே (௫௫)

கொடுந்தொழில்வேந்தர்மகுடந்தகர்த்துக்குலாவிவரு
தடங்கடவாரணக்கல்யாணசுந்தரதாமன்வெற்பில்
நெடுந்தளிர்மெல்லிலைஞாங்கர்கைமேற்கொண்டுநீயெமக்குக்
கடுங்குணமாகவெறுங்கொட்டைப்பாக்கிட்டகாரணமே (௫௬)

பனகசயனத்தன்பாதாம்புயத்தைப்பணிந்தவளர்
தினகரனிங்கிதகல்யாணசுந்தரசீர்விசையன்
கனகிரியீர்திருச்செங்கோட்டைமேவிற்கடுக்கண்டனை
மனனுறச்சேவிப்பதுநலமன்பர்வழக்குமிதே (௫௭)

கற்கும்பதந்தரக்கற்கும்பதத்தன்கருணையுயர்
சற்குணபூசிதன்கல்யாணசுந்தரசாமிவெற்பின்
நற்கனிமீர்நும்பெண்மங்கலச்சீர்க்குவிளக்குடனே
பொற்கிணந்தந்துமற்றெல்லாங்கொடுக்கிற்புகழுமக்கே (௫௮)

நந்தாக்கருணைமலர்க்கணம்மானைநயந்துதொழும்
பைந்தார்ப்புயனெங்கள்கல்யாணசுந்தரபார்த்தன்வெற்பிற்
றந்தாக்குஞ்சிற்றிடையாயுன்சிலம்பின்றாந்தெரிந்து
வந்தார்க்குக்கைவளையுங்காட்டலின்றிமறைத்ததென்னே (௫௯)

சுடர்வாளவுணர்கிளைவேரறுத்துச்சுரர்க்கருள்செய்
நெடுமால்பதம்பணிகல்யாணசுந்தரநீதன்வெற்பிற்
கொடிநேரிடைகொண்மலர்மாலைப்போலுங்குலாவியநீர்
வடுவேமுன்காட்டிக்கனியேபின்காட்டல்வரன்முறையே (௬௰)

தாரொன்றுதிண்புயன்கல்யாணசுந்தரசாமிவெற்பில்
வாரொன்றுமென்முலையீர்ரைக்காணிவயலுழுதற்
கேரொன்றிரண்டுபகடுண்டுடன்றீரிதற்கேயிணங்குஞ்
சீரொன்றுவேலையும்நேர்காட்டிற்கூட்டுக்குச்சேருவனே (௬௧)

பண்ணிற்கிசையுஞ்சுரும்புறழ்கூந்தற்பணிமொழியார்க்
கெண்ணிற்சிலைமதன்கல்யாணசுந்தரவிந்த்ரன்வெற்பிற்

பெண்ணிற்கணிகலங்கற்பாரநாடுதல்பேணுரிமைக்
கண்ணிற்கணிகலங்கண்ணோட்டமென்பதுங்கற்றிலையே (கூஉ)

கா[redacted]வுங்கமலாநிதியுங்கதிர்மணியும்
[redacted]சன்கலியாணசுந்தரநீசன்வெற்பில்
[redacted]ற்சோமங்கலமுறக்காட்டுமதற்கிணங்கச்
ச[redacted]ற்கொண்டசத்திரங்காட்டத்தயைபுரியே (கூங)

வன்பாற்சனகனைத்தென்பாற்செலவிட்டமால்பதத்தைத்
தன்பாலுளங்கொண்டகல்யாணசுந்தரசாமிவெற்பில்
இன்பான்மொழியணங்கேநகமங்கண்ணெதிர்கண்டுற்றால்
அன்பாலகங்குள்ளபெருமானிட்டத்தையடைதனன்றே (கூச)

சொன்னப்பெருங்கொடைக்கன்னன்கருங்கடல்சூழ்ந்தபுவி
மன்னர்க்கரசன்கலியாணசுந்தரமாறன்வெற்பில்
அன்னப்பெடைநடையாயென்னுயிர்ப்பயிராதரிக்க
வன்னப்பயோதரங்காட்டியென்னம்மைமறைத்துவைத்தே ()

கலையுற்றதிங்கட்குடையானென்றுரைவெங்கண்டுநிமிர்
சிலையுற்றசெங்கரன்கல்யாணசுந்தரதென்னன்வெற்பின்
முலையுற்றவெண்ணகைமாதர்பராவியமொய்குழலே
மலையுற்றவெள்ளமும்வந்தாலணைக்குமகத்துவமே (கூரு)

வெட்சிப்பகைவர்ப்பொருவில்விசையன்வெகுசனர்க்கி
ரட்சகசேகரன்கல்யாணசுந்தரநண்பன்வெற்பிற்
பட்சந்தழைத்தநின்பங்கயக்கைய்யிற்பழகுமுயர்
கட்செவிநோக்கினங்கேகயம்நெஞ்சங்களிப்பிக்குமே (கூஎ)

தனுமானும்நன்னுதல்விந்தையும்வாழ்த்தச்சமர்கட்க்கு
மினுமானும்வேற்கரன்கல்யாணசுந்தரவேளகிரிப்பொன்
னெனுமானும்போற்றுமெழிலீரிவ்வேலையிலங்கையிட
மனுமானும்ராமனொடுவேண்டும்ராவணனுரமாக்கே [redacted])

சொன்னிலைசற்றுந்தவறுவரிச்சந்த்ரன்றுன்னலரை [redacted]
மின்னிலைவேலிற்பொருதகரன்வாணர்மிடிதவிர்க்கும் [redacted]
நன்னிலைமைக்கொடைக்கல்யாணசுந்தரநண்பன்வெற்பா
தென்னிலைவிட்டுத்திருப்பூந்துறைசொண்டசெய்கையென்னே

நத்தூருங்கங்கைத்தடந்தோறுந்தோகைநடம்புரியுஞ்
சித்தூர்க்கரசன்கலியாணசுந்தரதீரன்வெற்பின்
முத்தாரச்செய்வளங்கண்டேன்கண்ணுற்றமுறையுங்கண்டால்
வித்தாரமாகிதம்பத்தோர்நடாத்தவிரும்புவனே (எ௰)

மாதவர்க்கிங்கிதன்கல்யாணசுந்தரவள்ளல்கிரி
மீதொருதோகைக்கிசைந்தவர்நீரென்றும்மேதினியோர்
ஓதுதல்காணவரும்போதுவேலையொழித்துவிட்டு
மோதமர்செய்கின்றசேவலைக்காட்டுமுறைமையென்னே (எக)

ஆலைக்கருப்பஞ்சிலையானைவென்றவருட்பரமன்
காலைப்பணிந்தருள்கல்யாணசுந்தரசன்னன்வெற்பின்
மாலைக்கருங்குழலீர்புரிநேசமறவர்முன்னம்
பாலைக்குறுவர்குறிஞ்சிக்குரிப்படிமுறையே (எஉ)

பொருமானைமாமுகனைப்பொருதும்பர்க்குப்போற்றுபதந்
தருமானையைப்பணிகல்யாணசுந்தரசாமிவெற்பிற்

திருமானைநேர்நின் றுணைவரைவிட்டுச்செழுமைகொண்ட
மருமானைநின்கைவசமாக்கிக்கொள்ளுதன்மாண்பலவே (௭௩)

[redacted]ாண்டிருந்தவிடங்கர்முன்பற்றியதந்தியினைத்
[redacted]ண்டுகாக்கக்கருணைவைத்தேவந்தசெந்திருமால்
[redacted]ண்டுபோற்றியகல்யாணசுந்தரபார்த்தன்வெற்பிற்
[redacted]ாண்டுசக்கரஞ்சேர்த்தாணினைமயற்கொப்பென்பனே ( )

செப்புந்தமிழ்த்தொண்டைமண்டலநாட்டுத்திருக்குலத்துண்
மெய்ப்புகழ்வள்ளல்கலியாணசுந்தரவேந்தன்வெற்பில்
துப்பிற்சிறந்தகனிவாயமுதென்றுந்துய்ப்பவருக்
குப்பின்றியோதனமிட்டீர்சுவைக்கதுரித்தலவே (௭௫)

புள்ளுலவுங்கதிர்வேலிற்செருவிற்பொருங்களிற்று
நள்ளலர்யோர்வென்றகல்யாணசுந்தரநண்பன்வெற்பில்
வெள்ளியவாணகைமெல்லீர்நன்மாதரைமேற்புலவர்
வள்ளலையன்றிக்கயவரைநோக்கிமதித்திலரே (௭௬)

ஏடார்கமலத்திருவிந்தைபூமினிவர்பொருந்த
வாடாததிண்புயன்கல்யாணசுந்தரமன்னன்வெற்பிற்
சூடாமணியைநன்னூற்குமுற்றேறுந்தொடர்பிசைத்துங்
கோடாமற்காரிகைதாங்கற்குநேயங்குறித்ததென்னே (௭௭)

உலகமகிழ்புகழ்மால்ராமசாமியுசிதனருள்
நலகருணைகரன்கல்யாணசுந்தரநண்பன்வெற்பின்
மலர்மைக்கணங்குழலாய்மணவேளைமதிப்பவர்முன்
கலகமிலாமலமுதங்கொள்வார்சொற்கணிதங்கொண்டே (௭௮)

மேனையுதவுவிமலைபொற்பாதம்வியந்துதொழுஞ்
சேனையதிபன்கலியாணசுந்தரதீரன்வெற்பின்
மானைவிரும்பிவருவோர்முன்னந்தவழியில்வெம்போர்
ஆனையைவிட்டுத்துரத்துதனீதிக்கழகதன்றே

சொல்லினந்தேர்ந்துபொருளினங்காட்டிச்சொலும்பு
நல்லினங்காத்தருள்கல்யாணசுந்தரநண்பன்வெற்பிற்
கல்லினஞ்சூழ்பொற்குழையீர்விகாரமுங்காட்டுமன்றோ
வல்லினந்தனுக்குமுன்னேவரிற்சொல்வழக்கினிற்கே (௮௰)

அல்லார்கருங்குழற்பைந்தொடியார்மதனம்புவிமேல்
வல்லாரெலாம்புகழ்கல்யாணசுந்தரவள்ளல்வெற்பிற்
கல்லாரைக்கைவிட்டுமீனரையேபினுங்கைக்கொளுதல்
நல்லார்குணங்கட்கிசைந்ததுவோவிதுஞாயமன்றே (௮௰௧)

இருந்தாரைவென்றவன்கல்யாணசுந்தரதீரன்வெற்பிற்
பெருந்தாமரைமலர்ப்பெண்ணேநின்மாட்டிற்பெருமையுற்று
வருந்தாதமாதுளவண்ணனிடங்கொண்டவண்ணங்கண்டுங்
கருந்தாரைக்காலன்வலனோர்க்குவந்திடக்கண்டிலனே (௮௰௨)

பொன்வளர்மார்பிற்செழுந்துளபம்புனைபூவைவண்ணன்
மென்மலர்த்தாள்பணிகல்யாணசுந்தரவேந்தன்வெற்பீர்
மன்னுறவேடம்பதினெண்ணுவார்பொன்வளம்படைத்து
முன்வெங்கடாசலமாலாக்குஞ்சீரென்றுமுன்னுவரே (௮௰௩)

கொண்டன்மணிவண்ணன்பாதாம்புயத்தையுட்கொண்டுதொ
எண்டிசையும்புகழ்கல்யாணசுந்தரவிந்த்ரன்வெற்பின் [ழும்

ஒண்டொடியேயிங்குழூடாதபாற்குடத்தொட்டுமென்றோ
வண்டைமலர்க்கைபிடித்தனைநல்லவழக்கிதன்றே (௮௪)

[redacted]னுமார்பன்கலியாணசுந்தரசாமிவெற்பிற்
[redacted]வில்லினைநின்கண்வைத்தாதரஞ்செய்ததுபோல்
[redacted]வகொங்கையுங்கைக்கொளக்காணின்மதிமருட்டுங்
[redacted]வாணுதலாயுனையாட்கொண்டகோவென்பனே (௮௫)

செறம்போர்பரவுந்திருத்தொண்டைநாட்டுநிருபன்றெவ்வர்
மற்போரைவென்றகலியாணசுந்தரவள்ளலுயர்
வெற்போர்செழுங்குயிலேவண்டர்போரைவிரைந்தடக்கக்
சற்போரையென்வசங்காட்டுநின்வல்லபங்காண்பரிதே (௮௬)

கலைவளர்மாமதிநேர்முகத்தாய்கலைகற்றவர்தங்
நிலைதெரிந்தேயருள்கல்யாணசுந்தரநீதன்வெற்பிற்
சிலைநுதலேயங்குறுமாதவர்க்குநற்றென்பொதிகை
மலையிடமன்றிக்கடலிடங்கோடல்வழக்கல்வே (௮௭)

அக்கரமெட்டுடையோன்பொற்பதத்தினருச்சனைசெய
அக்கரமேகொண்டகல்யாணசுந்தரவண்ணல்வெற்பிற்
சக்கரவாகங்கைக்கொள்ளேனெனச்சொலித்தள்ளிவிட்டுஞ்
சக்கரவாகங்கைக்கொண்டாயுனக்குச்சரியிதன்றே (௮௮)

வடமேருமந்தரவெற்பெனும்பொற்புயமன்னர்புகழ்
திடவான்செழுந்தமிழ்க்கல்யாணசுந்தரதீரன்வரை
யிட்மேலுலாமுனைவேட்டவினைஞருக்கேற்குங்கொலோ
கடமானெதிர்வரக்கண்டுங்கைவேலைக்கரந்ததுவே (௮௯)

திருவும்புகழுங்கருணையும்வண்மையுஞ்செந்தமிழும்
மருவுங்குணாகரன்கல்யாணசுந்தரமால்சிலம்பில்
ஒருசிறுநூலினிருகிரிநாட்டற்குரியவருக்
கிருகடலுங்குடங்கைமிசைத்தாங்குதலேற்றமன்றே

தூதேநடந்தைவரையேபுரந்ததுழாயணையுள்
மீதேதியாணிக்குங்கல்யாணசுந்தர்வேள்கிரிமேன்
மாதேவரையெதிர்கண்டோர்சுகத்தைமருவுறவப்
போதேதிருவரங்கொள்வாரன்றேபெரும்பூதலத்தே (௯௧)

மெய்த்திரஞ்சற்றுந்தவறுதவாசகன்வேந்தர்புகழ்
சித்திரவீரியன்கல்யாணசுந்தரதென்னன்வெற்பின்
வித்திரமாமடவீர்சுகமாமுத்திமேவிடுவர்
பத்திரஞ்சாத்திச்சிவலிங்கந்தன்னைப்பணிகுவரே (௯௨)

நாட்டிற்சிறந்ததிருத்தொண்டைமண்டலநாட்டினிசை
பூட்டியசேகரன்கல்யாணசுந்தரபூமனருள்
காட்டியவெற்பிற்கருங்குயிலேலைக்கணக்கைக்கொண்டு
கோட்டினிற்றுக்கல்செய்வாய்நீமுதல்வந்துகூடுதற்கே (௯௩)

தினமிக்கவாணர்தமிழ்ப்பிரசங்கஞ்செயுஞ்செயன்மேன்
மனம்வைத்தநேமன்கலியாணசுந்தரவள்ளல்வெற்பிற்
கனமெட்டுராத்திரிமன்னவர்சேலைகண்காட்டுதல்போல்
இனமெய்த்துங்காவியுறுங்கோவைக்காட்டுதியின்புறவே (௯௪)

மாதவன்கொண்டன்மணிவண்ணன்கண்ணன்வரையெடுத்த
சீதரன்றாள்பணிகல்யாணசுந்தரதென்னன்வெற்பிற்

ருதவிழ்பூங்குழற்கன்னிநல்லாயிந்தத்தாரணிமேல்
ஆசுவன்றோன்றினுங்கண்ணொளிவேண்டுமற்றஞ்சலிக்கே (௧௫)

[redacted]ண்டசூரரைவென்றகுகேசன்கழல்பரவுங்
[redacted]ண்டமாலெங்கள்கல்யாணசுந்தரகொண்டல்வெற்பி
[redacted]ண்டவல்லுன்மடவீர்மற்றுரையன்பான்மருவி [ற்
[redacted]ண்டவரைவிடுத்தீருமச்சுமதியிதன்றே (௧௬)

செயத்திற்களத்தெதிரொன்றுரைவென்றதிருவிந்தையைப்
புயத்திற்பொருத்தியகல்யாணசுந்தரபூமன்வெற்பில்
நயத்திற்செழித்தகருங்குழலேசையினண்ணியமீன்
கயத்திற்குதித்திடுமென்றோவிடாமற்கரந்ததுவே (௧௭)

வரிசைச்சுருதித்திருநால்வர்வாழ்த்துமகேச்சுரனைத்
தரிசித்துவாழ்கின்றகல்யாணசுந்தரசாமிவெற்பின்
உரிமைக்குரியகுயவரைநீக்கியுருவனையுந்
திரிகைக்கிணங்கிடவேற்றுரைநாட்டல்சிறப்பலவே (௧௮)

புயமால்வரையெனப்பெற்றோனதன்மிசைப்பூமகளுஞ்
செயமாதுந்தங்குங்கல்யாணசுந்தரதென்னன்வெற்பீர்
வயமாவும்வேறுவயமாவின்மேற்கொண்டவன்மைசண்டோ
நயமாகத்தாமரைமேலொருதாமரைநண்ணினதே (௧௯)

மானேயெனச்சென்றமாரீசனைச்கொன்றவள்ளலையெம்
மானேயெனப்பணிகல்யாணசுந்தரமாறன்வெற்பின்
மானேமலைகொண்டமானுங்கொண்டான்மகிழ்வாய்மலைய
மானேயெனவுனைநாடோறுஞ்சொல்வனிவ்வையகத்தே (௨௰)

30 நாணிக்கண்புதைத்தல் என்னும் ஒருதுறைக்கோவை.

இக்கரசர்க்குயர்கல்யாணசுந்தரசீரன்வரை
மைக்கண்மடமங்கையர்க்கரசேநன்மணிவளைசேர்
அக்கரமேற்சிலைசீர்வாளுநீத்தென்றமைத்தது போற்
சக்கரமுங்கைக்கொண்டானைமாலென்றுசாற்றுவ[redacted]

வாழி.

வாழிசொக்கேசர்கயற்கண்ணிவாழிமலர்த்திருமால்
வாழிசித்தூர்வளர்கல்யாணசுந்தரவள்ளலெங்கோன்
வாழிமக்கட்பெரும்பேறுள்ளயாவையும்வாழிபுவி
வாழிதிருத்தொண்டைமண்டலங்கோவையும்வாழியவே.



